உ

கடவுள் துணை.

# அகஸ்தியமகாமுனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# பரிபூரணம்

## நானூறு.

---

இவை

சரவணபுரம்,

சண்முகமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு,

---

புரசை,

ஏழுமலைப்பிள்ளை

அவர்களது

விவேகவிளக்கஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது,

௧௮௯௫௵.





சிவமயம்.

# அகஸ்தியர்பரிபூரணத்தின் அகராதி.





சிவமயம்.

அகஸ்தியமுனிவரருளிச்செய்த

# பரிபூரணம், ௪௦௦.



## காப்பு.

பூரணமாய்நிறைந்தபரிபூரணத்தைப்போற்றிப்
புகழ்பெரியவயித்தியபூரணத்தைப்பாடக்
காரணமாய்கருவுருவெங்குருதானாய்க்
கண்மணியினடுவான கருணைதன்னை
யாரணமாய்முக்கோண நடுவினின்ற
அம்பரத்தையனுதினமுமறிவாற்போற்றி
வாரணமாமுகத்தோனை யனுதினமும்போற்றி
மகத்தானவேதியனை வணங்கினேனே. க

வணங்கிமிக நிற்கையிலே வேதியோனும் வடமொழியைத் தான் கொடுத்தே யருளுமீந்தார், இணங்கிமிக பூரணத்தை யிருந்துபார்த்தேன் ஏகாந்தபூரணத்தினின்பங்கண்டு, குணங்கிமிகப்போகாம லறிவிற்கூடி குருவானபூரணத்தைக் கூர்ந்துபாடி, வணங்கிமிகவேதியன்முன்வைத்துயானும் வணக்கமாய்கைகூப்பிப் பணிந்திட்டேனே, உ

பணிந்திட்டபின்னூலைவேதியனும் பக்குவமாயாதியந்த நன்றாய்ப் பார்த்து, கணிந்திட்டகருவெல்லா மிதிலேதோன்றுங் கைம்முறையுங் குருமுறையுமிதிலேதோன்றும், அணிந்திட்டவிந்நூலைவைத்துக்கொண்டு அனுதினமும்பூரணத்தைப்பண்பாய்க்கண்டு, துணிந்திட்டவயித்தியமும் வாதஞ்செய்து துரியமுள்ளயோகமுடன் ஞானம்பாரே. ௩

பாரென்றுசொன்னமொழி பெற்றுக்கொண்டு பதிவானபொதியையிலேயிருக்கும்போது, நேரென்றவயித்தியபூரணத்தைப்பார்க்க நிமிஷத்திற்றென்பொதியிற்சித்தர்வந்து, தேரென்றதென்பொதியிற் கும்பமூர்த்தி செகச்சோதியானபூரணத்தைப்பார்க்க, மேரென்றமேருகிரிதன்னில்வந்தோம் மேன்மையுடனடிமைபடைகாளென்றா"ர். ௪

என்றதொரு சித்தர்களை பார்த்துயானு மின்பமுடன்பூரணத்தைய வருக்கீந்தேன், உம்பருக்குமுலகத்திலுள்ளபேர்க்கும் வாயாரவாய்த்தாலும்வழிதோன்றாது, என்றதொரு சிறயோகிக்கெய்துமாகி விதிலுள்ள கருத்தெல்லாமெய்துமெய்துங், கண்டுபின்காணாமற்கலைக்குஞ்சோதிக் கருவியிலே யமைந்தபூரணமென்பாரே. ௫

பாரப்பாபூரணமாமிந்நூலைப் பாரிலுள்ளோர்க்கியாதே சபதனஞ்சொன்னேன், நேரப்பாபூரணமும் வயித்தியமுஞ்சொன்னேன் நிலையாதகுருநாடி நிலைக்கச்சொன்னேன், காரப்பாயற்பமொடுசெந்தூரங்கள்கட்டாணமாத்திரைகள் சாக்குவைப்பு, பேரப்பாமுப்பூவின் றீட்சைமார்க்கம் பெருநூலின்மறைந்ததெல்லாம்பேசினேனே. ௬

பேசினேன்குளிகைகள் ரசாயனங்கள் பலமானவேதையமும் யோகத்தோடு, வீசினேன்சகலவியாதிமேதிர விளம்பினேன் வசியமோடஞ்சனமாமுற்றும், தூசியிலேதிரிபுகைகளஞ்சொன்னேன் ஆடிவாணமாரணமும்வைப்புஞ்சொன்னேன், பாஷையிலே அஷ்டகர்ம மெட்டுஞ்சொன்னேன், பாராபரத்தின்குறிசொன்னேன் பணிந்துகேளே. ௭

நூல்விவரம்.

கேளப்பாமூன்றுலட்சங்காப்புசொன்னேன் இருடையுள்ளவாதமது இலட்சங்காப்புச், சூளப்பாவயித்தியத்தி லிரண்டுலட்சஞ்சொன்னேன வற்றைக்குறுக்கியிருநாண்டஞ்சொன்னேன், பாளப்பாவையக்குறுக்கிப் பாதியாக பாடினேன்அறுநூறுநாலுஞ்சொன்னேன், வேளப்பாதிராவகமென் னூறுஞ்சொன்னேன் மேதைமுறை யைந்நூற்றில் வெளியிட்டேனே. ௮

வெளியிட்டவையம்பதிலே மூன்றுஞ்சொன்னேன் விபரமாய் மூன்னூற்றிற்செந்தூரஞ்சொன்னேன், வழியாகவெண்பதிலே மூப்பூஞ்சொன்னேன் வயித்தியந்தானாயிரத்தைஞ் நூறுஞ்சொன்னேன், அழியாத மூன்னூற்றிற்கர்மதர்மம் அன்பாகச்சொன்னதையறிந்துபாரு, முழியாதே நானூற்றி லிரண்டுசொன்னேன் முடிவதோர் தீர்க்கமாம்நாலுநூறு. ௯

நாநூற்றில்வயித்தியமும் பூரணமுந்தோன்றும் நாடியுடன்குருவுநாடிநன்றாய்த்தோன்றப், பாலானமுப்பாலு நன்றாய்த்தோன்றப் பாடினேன்வயித்தியபூரணமிதப்பா, தேடிநூற்கிடையாதிவ் வுலகத்துள்ளே சிவயோகிவைத்திருப்பார் கொடுக்கமாட்டார், காராகவவர்களிடந்தொண்டு செய்து நன்மையுடன்நூல்வாங்கிகொட்டம்பாரே. ௰

வைராக்கியம்.

நாட்டமென்று பூரணத்தைக்காணவென்றால் நன்மையுள்ளசற்குருவாற்காணவேண்டும், ஓட்டமென்றவோட்டமெல்லாம்வோடாதேநீ ஒருமனதாய்சுழிமுனையினுகந்துநில்லு, ஆட்டமென்றதிருநடனமங்கேயுண்டுஐம்பத்தோரெழுத்துமுதலெல்லாமுண்டு, பாட்டைமிகப்பிதத்ததினாலென்னவுண்டு பத்திமுத்திவயிராக்கியமாசப்பாரே. ௯௧

பாரப்பாவுலகத்தில் ஞானமென்பார் பராபரத்தினிருப்பிடத்தைப்பாரார்பாரார், சாரப்பாஉலகத்தில்யோகஞ்செய்வார்சார்ந்திருக்கும்பரஞ்சோதிதன்னைக்காணார், ஊரப்பாகிரியையென்றே யுழவுவார்கள் உத்தமனேஉள்ளுயிரையறியமாட்டார், நேரப்பாசரிதையென்பார் தன்னுக்குள்ளேநெருப்பாறுந்திருக்கோயில்கண்டிலாரே. ௯௨

நெருப்பாறுமயிர்ப்பாலங்கடந்தப்பாலே நிலையாதகங்கையடா நீந்தப்போகா, இருப்பார்களதுபயமா யாடியாடி இன்பநலம்பற்றாகி யோடியோடி, குறிப்பாகக்கண்டவர்க்கே தெரியுமார்க்கம் கோடிரவிசுடர்காந்திகொண்டவாட்டம், வெறிப்பாகபூரணத்தையறிவாற்பார்க்கவெட்டவெளியாகுமடாகுருவைத்தேடே. ௯௩

பெருநூற்காவியப்புகழ்ச்சி.

குருவானஞானகாவியத்திற்றானுங் கூர்மையுள்ளபூரணத்தின்குறிப்பைச்சொன்னேன், பரிவானசௌமியமாஞ்சுருக்கமப்பாபாடினேனென்னூற்றில்ஞானமெல்லாம், கருவானபூரணமீராறுநூலிற் கருதினேன்ஞானமொடுகற்பமெல்லாஞ் சரியானபெருநூல் காவியத்திற்றானுஞ் சாற்றினேன்மும்மணியின்றன்மைதானே. ௯௪

தன்மையுள்ளசௌமியசாகரத்திற்றானுஞ் சகலமுமேயாதியந்தமாகச்சொன்னேன், முன்னமேகுருநூலாம்பன்னிரண்டுநூற்றில் முத்தியுள்ளஞானமொடுகற்பஞ்சொன்னேன், வன்மையுள்ளவயித்தியபூரணத்தைவாழ்த்தினேன்வயித்தியத்தின்வழிதானன்றாய்ச், சொன்னமொழியெவ்வளவுந்தப்போயில்லைசோதியென்றபூரணத்தாற் றுலக்கினேனே. ௯௫

பூரணமாமாதாரந் தன்னினின்ற புரியட்டதசவாய்வின் பேர்தான்கேளு, வாரணமாம்பிராணவஞேடபானன்றானும் மகத்தானவுதானனுடன்சமானன்வியானன், காரணமாநாகனொடு கூர்மன்றானுங் கனமானகிருகரன்கூர்தேவதத்தன், ஆரணமாந்தனஞ்சயனும் பத்துமாச்சு அப்பனேயசைவையினி அறைறிறேனே, ௯௬

அறைகிறே னிடைகலையின் சுழினையாகி அலம்புடையுங்காந்தாரிய
த்தியோடு,- இதையானசிகுவைசங்கினியோடெண்ண இயல்புருடன்குரு
வென்பார்சோத்திரந்தான், நிறையானநெடுந்தொக்கு சட்சுவோடு நேர்
மையுள்ளசுக்குவையாக்கிராணமாகும், முறையுடனேயிவையறிந்துநிதா ௰௭
னங்கண்டு முதன்மையுள்ளகுறுநாடியஞ்சுங்கேளே.

புருஷநாடி.

அஞ்சாகிப்பத்தானதசநாடிக்குள் அப்பனேரவிமதிய நெருப்புமா
கி, மிஞ்சாதவாதபித்தஞ்சிலேஷ்மமாகி விராமன்மூன் றினிலேவியாநிகா
ண,நெஞ்சாரக்காணுதற்குவகையைக்கேளு நேர்மையுள்ளதத்துவத்தைத
நினைவாய்ப்பார்த்து, செஞ்சாரைப்போலப்பா நாடிதன்னை திறமாகக்கா ௰அ
ணுதற்குவகையைக்கேளே.

கேளப்பாபுருடருக்கு வலதுகையைக் கிருபையுடன் முன் பிடித்து
நெட்டைவாங்கி, சூளப்பாபெருவிரலோ ரங்குலத்துக்கப்பாற்சுகமாகமூ
விரலாலழுத்திப்பாரு, வாளப்பாமுதல்விரலேவாதநாடி வண்மையுடன
டுவிரலேபித்தநாடி, தேளப்பாகடைவிரலே சேஷ்மநாடி திறமாகமின்ன ௰௯
றிவாற்றெளிந்துகாணே.

புருடருக்குநாடிகள்நடக்கும்விதம்.

காணவேபுருடருக்கு வாதநாடி காணகத்துமயில்போலும் அன்ன
ம்போலும், தோணவேகோழிநடை நடக்குஞ்சொன்னேன் தூரியமென்
றபித்தத்தினாடிகேளு, ஏணவேயாமையுடனடையைப்போலும் என்பக
னேஅட்டையைப்போ னடக்கும்பாரு, வேணவேசேத்துமந்தான்பாம்பு ௨௰
போலும் வேணபடிதவளைகுதிபோலாம்பாரே.

பெண்களுக்கு நாடிகள் நடக்கும் விதம்.

பார்க்கவேபெண்டுகளுக்கிடதுபக்கம்பதிவாகப்பார்த்திடவேபகரக்
கேளு, கார்க்கவேவாதமது சர்ப்பம்போலாங் கனமானபித்தமது தவளை
போலாஞ், சேர்க்கவே யையமென்ற நாடிதானுஞ் சிறுநடையாவன்னம்
போற் செறிப்பாய்காணும், ஆர்க்குமேதோன்றுமிந்த நாடிமூன்றும் அ ௨௧
னுதினமுநல்லறிவாலறிந்துதேறே.

நாடிகள் கீழுமேலுமீறியோடும்விதம்.

தேறவே * சந்திரனும்வாதநாடி திறமானசூரியனும்பித்தநாடி, மீ
றவேயக்கினியும்சேஷ்மநாடி விளங்கவேவியாழமதி லங்கிமீறும், கூறவே
மந்தன்சேயிரவிமூன்றுங் குணமானசூரியனுங் குழறியோடும், ஏறவே
திங்கள்புதன்வெள்ளிதானும்பின்புமுள்ளசந்திரனுமோடுங்காணே. ௨௨

* ஆதிவாரம் விடியற்காலத்தில்-சூரியகலை.

திங்கள்விடியற்காலத்தில்-சந்திரகலை
செவ்வாய்விடியற்காலத்தில்-சூரியகலை
புதனவிடியற்காலத்தில்-சந்திரகலை
வளர்பிறைவியாழம்விடியற்காலத்தில்-சந்திரகலை
தேய்பிறைவியாழம்விடியற்காலத்தில்-சூரியகலை
வெள்ளி-விடியற்காலத்தில்சந்திரகலை
சனிவிடியற்காலத்தில்-சூரியகலை

இவ்வித கலைபிங்கலை சுழிமுனைமூன்றுமே வாதபித்த சேஷ்மங்களென்பவைகளவைதப்பினுல்வருவனவற்றைஉங்கள்கையிற் கண்டுகொள்க. ௨௨

வியாதிகளறிய,

காணவேவயிரவியிலே வாதமோடில் கனமானசளியிரும விரைப்புண்டாமே, நாணவேசெவ்வாயில வாதமோடில் நன்மை யுள்ளசுரமதுதானணுகுஞ் சொன்னேன், நாணவேமந்தனிலேவாதமோடில் துணிந்தகொரு சிதளபுஞ்ஜன்னிவெய்தும், வேணவே வியாழத்திவ்வாதமோடில்வியாவோடுதேகமெல்லாம்வலியுண்டாமே. ௨௩

உண்டான திக்களிலே பித்தமீறில்உத்தமனே சலதோஷமுடனேகாணும், பண்டானபுந்தியிலே பித்தமோடில் பாரமுடனீரேற்றந் தலைக்குத்துண்டாம், அண்டான வெள்ளியிலே பித்தமோடில் அப்பனேகண்ணோயுங் காதுநோயாம், தண்டானகுழுவினிலேபித்தமோடில்தண்மையுறுந்தாபசுரந்தலைநோக்காடே. ௨௪

நோக்காட்டை யறிந்துரைக்கவயித்தியர்க்கு நண்ணறிவாய்சொல்லிவிட்டே னுணக்கமெல்லாம், பாற்காட்டாற் றெரியாதுபழக்கமாகப் பார்த்தறிந்தோர் தனையெடுத்துப் பரிவாய்க்கேளு கேட்காட்டாற்றிடையாதிவ் வுலகத்துள்ளே கிருபையுடன் மனமுறுதியாகவேயும், வாய்க்காட்டாவின்றால்தான்வாய்க்கும்பாரு வண்மையுள்ளகுருநாடி வகையைப்பாரே. ௨௫

குருநாடியிருக்குமிடம்.

பாரப்பாகுருநாடியைத்துக்குநவோய் பாறிநிற்கும் வரலாறுதனைக்கேளும் சீரப்பாபித்தத்தின் முன்னேநிற்கும் * திசைநாடிபத்துக்குக் திறமாய்நிற்கும், ஏரப்பாவாதமென்று சொல்வார்மூடர்இருத்தியங்கேபார்ப்பளவில் வேறாய்நிற்குந், தாரப்பாகொண்டகுருநாடிநேர்மைதனையறிய வகையுனக்குச்சாற்றுவேனே. ௨௬

* தசநாடி-திசைநாடியெனமருவியது

## பஞ்சநாடிகளிருக்குமிடம்.

சாற்றுவேன் பெருவிரலிற் பூசனாடி சங்கையில்லாதுள்ளாண்டிவாதமென்க. ஏற்றமுள்ள நடுவில்தான் பித்தமாகும், இசைந்ததொருபவித்திரமே யையமாகுந், தோற்றுகின்ற சிறுவிரல்தான் பூதநாடி சுத்தமுள்ளகுருநாடியைத்துட் சேரு. மாற்றுமேகுருநாடியைந் துட்சேர்ந்துவளர்ந்துநிற்கும் பேர்பெரியவண்மைதானே. ௨௭

பேர்பெரிய குருநாடி குணமேதன்னிற் பிரண்டுவரும் வாதத்திட்டைமேல், சிறியவாய்வுமிகு மிருமேறுன்றாந் தினவுசொறிமிகவும்வருந்தேகம்வாடுஞ் சூரியபித்தத்திலானைமேபோலத் தோன்றிலே சுரமிக்குஞ்சுழற்றும் வாய்நீர், கார்பெருகி வருவதுபோல் வியர்வுதோன்றுஞ்சதித்திடல்நீர்கட்டுஞ் சிலேத்துமத்திற்போமே. ௨௮

சேத்துமத்திற் குருநாடி சிக்கம்போலே சீறிநிற்கிலே தின்குணந்தான் சந்தோன்றும், ஆற்பனத்தைப் பூருவத்தமருமாகில் அசாத்தியமா மரணகுறிதப்பாதப்பா, காற்பனமே குருநாடி ஏன்றிப்போகில் சழியும் வயிற் கடுப்பெடுக்குங் கைகால்வீங்கும், ஏற்பனவுமில்லையில்லை திட்டஞ்சொன்னோ மிசைந்தகுருநாடியிருந்திப்பாரே. ௨௯

பாரப்பா குருநாடிபக்கம்பாவில் பாரித்தசிலேத்துமந்தானிதேமோதும், கூரப்பா குருநாடி நேரோடிற்கில் குற்றமில்லைவாதபித்தமிரண்டுசேரும், காரப்பா குருநாடி பின்னேவாங்கில் கட்டாதேயசாத்தியங்கள்தானுண்டாகும், காரப்பா உடலுக்குயிராய்நின்ற கருவானகுருநாடியொன்றுதானே. ௩௰

ஒன்றுக்குமெட்டாத நாடிநேர்மை யூடுருவித்தானிருக்குமுண்மைசேனீர் வண்டுகள்தானமதுவருந்து நேர்மைபோலவாதபித்தசிலேத்துமத்தின் மதுவையுண்ணும், என்றைக்குவாதபித்த நடுவேநிற்கும் ஏறுவதுங்குறைவதுவுமில்லையப்பா, கன்றுக்குப்பாவிறங்கும் பசுவைப்போலகாத்திருக்குங்குருநாடிகாலைப்பாரே. ௩௧

குருநாடிநிலையறியாக் குருடரெல்லாங் கூட்டமிட்டுச்சாத்திரத்துக்குவமைசொல்வார், மருநாடிவாதபித்தசிலேத்துமமூன்றின் மத்தியமேன்றினையறியார்வார்த்தைசொல்வார், கருநாடி குருநாடியாகக்காணுங்கைம்முறையாய்க் குருதொட்டுக்காட்டத்தோன்றும், பெருநாடிசாத்திரத்தின்மயங்கிடாதேபுலத்தியாகுருநாடிப்பின்னல்பாரே. ௩௨

பார்க்கப்பாவாதபித்த நடுவேபார்க்கிற் பண்டதுபோன்மதுவுண்ணுமத்தியத்தில், போற்றப்பாமூவிரலு முருவைத்தாண்டிப் பூரணமா

ய் மூலமூதூநவிப்பாய்ந்து சாற்றப்பா விசைநரம்பினூடேசேர்ந்து சந்திரமண்டலமேவிச் சார்ந்துபின்னு நாற்றமுற்றகுருநாடியெங்குஞ்சுற்றி நடுவில்வருநேர்மைதனைநாடிப்பாரே. ௩௩

பம்பரம்போற் குறுநாடிகிறுகிறென்று பற்றிநிற்கும்வாதபித்தநடுவிலேதான், அம்பரம்போற் குழறியெழும்வாதபித்த மையமென்றநாடிமுதலாடியோடிக் கம்பமுடன் மண்டலங்கண்மூன்றுஞ் சுற்றிக்கதிரிக்கோன் மாறலெனைக்கட்டிச்சேர்ந்து கம்பமுடன்வாதபித்தநடுவிலேதான் தமாகம்போ லாடிநிற்குங்குருவிதாமே. ௩௪

குருநாடிவாதமதனிற்கும்போது கோழியுடன் அன்னமயில்குறியாமென்ன, வருநாடிபித்தத்தினிற்கும்போது வளாமையட்டையென வருக்கலாமே, திருநாடிசிலேத்துமத்தினிற்கும்போது தெறித்துவிழும்விட்டிலைப்போற்றெளிந்துகாணும் பெருநாடிசாத்திரத்தி லலையவேண்டாம் பிராணநிலைதனையறிந்து மரணம்பாரே. ௩௫

மரணநாடி.

மரணமதையறிந்ததற்கு குறியைக்கேளு வழுவாதவிசைநரம்புகுவிர்ந்துகாணும், குரணமெனும்பொறிகளெல்லாந்தளர்ந்துமெத்தவிசைநரம்புதான்றளர்ந்து விரைந்துவாங்கி, நாநெறனைப்பற்கடித்து மணியும்கட்டு நாவுலர்ந்து மூச்சயர்ந்துநறுக்குமுண்டாய்த், தாரணமெனுமவ்வாதபித்தசிலேத்மமெல்லாஞ் சோத்தியம்பார் விட்டிலைப்போற்றுடிக்கிற்சாவாம். ௩௬

துடிகொண்டசேத்துமந்தான்வெள்ளம்போலேசுருசுருக்காய்மடமடெனவோடுமாகில், அடிகண்டுமற்றுநாள்மரணமாகும்அப்பனேபித்தமதுசிதறியோடில், முடிகொண்டமூன்றுநாள்சாவார்சொன்னேன்முழுமையுமே வாதமதுசிதறியோடில், இடிகண்ட எட்டாநாள்மரணமாவாரின்பமாய்க்கண்டறிந்தே யிடைந்துநில்லே, ௩௭

நில்லப்பா வாதபித்தமிரண்டுங்கூடிநிலைதப்பிச்சிதறியதுவோடுமானால், கொல்லுமப்பா பதினைந்துநாளிற்றானுங் குணமாக விதனுடனே ஐயங்கூடில், வெல்லுமப்பா மண்டலத்தில் யாக்கைபாழாம் விதமாகமூன்றுமேயொன்றாய்க்கூடி. அல்லப்பா அரணைவால்துடியேகாணில் அப்பனேயவர்பிழையாறிந்துபாரே. ௩௮

பிழையாதவாதபித்தபித்தசேத்மங்கூடியிரண்டுவருந்தேள்கொடுக்குப்போலேயாடி, உளையாகவோடம்போலோடுமானால் உத்தமனேதிங்களிலேமரணமாவார், குளையாதநாடியின்மெய்க்குறியைக்காணார்கூட்டமிட்டுக்குருவெனவே பிரசங்கிப்பார், விழிபானகண்ணிரண்டுமற்றகண்ணும் விதியறிந்தாற்சர்வியுமே விலகும்பாரே. ௩௯

சந்தியெழுபோதிலிந்த நாடிமூன்றும் சாதகமாய்ச்சுழல்வண்டு த
ண்ணீர்மீதில், உன்னியதுபாபசத்தேயொடுருப்போல் ஓடியெங்கும்வா
தபித்த சேத்துமமெல்லாம், கன்னியதுசாதகமாய் வருமேயாகில்கதிப்
பாகும் வாதபித்தம்பம்பாம்போல் பின்னியதுவிட்டிலைப்போற்றெறிந்
துவீழிற் பேச்சில்லைமரணமென்று பிரித்துச்சொல்லே. ௪௰

சொல்லப்பா வாய்வுக்கு மந்தத்துக்குந் துணையாக அமர்ந்துமெத்
தத்தளர்வாயோடும், அல்லப்பா பசிதனக்குத் தாங்கியோடும் அப்பனே
சன்னிதான் புழுப்போலோடும், இல்லைப்பா வயிற்றுவலி கண்டோர்க்கு
ரோகவுள்ளுறவாய் வாங்கியோடும் கல்லப்பாகிரந்தியென்றநோய்த
னக்குங் கணையுடைந்தவருவிளையப்போற் காணுங்காணே, ௪௧

காணிதத்தில்வாதமென்றுற்சேத்மவாயம்காணுமடாகுலையென்று
ற்சேத்மபித்தம் விரணமுடன் புன்புறைக்குவாதபித்தம்விதியறியாப்பி
னசந்தான்பித்தசேத்மம், தூரணமுடனீற்பாடுகர்ப்பப்பாடு சொல்லுகி
றநாடியெல்லாஞ் சுழன்றுகாணும், கிரணமென்றபாம்புவிஷந்தானுமெ
ல்லாங் கெதிகெட்டுக்காணுது கெர்ப்பமாமே. ௪௨

வாய்வுக்கும்-மந்தத்துக்குங்-கெர்ப்பபிணிக்கும்-வியாதிநாடி.

கெர்ப்பபிணிக்கு வாதபித்தங்கலங்கிக்காணுங் கிராணியதிசாரமெ
ன்றுற் றளர்ந்துகாணும் உம்பவித்த கபமீளைகாசரோகம் உற்றிடிலோசி
லேத்துமந்தான் மீறிக்காணும், பிற்பிடித்தவிஷநீருஞ்சோகைபாண்டும்
பிலமானால் வீணைப்போல் மீட்டிப்பாரு, பற்பிடித்தமேகமென்றூல்பித்
தமீறும் பாலகனைகன்னைகொண்டுசோம்பாரே. ௪௩

நீர்மேகமானவர்க்குநாடிதானும்சிர்ணயமாய்நாடியெல்லாம்பிலமே
கெட்டுக், கார்மேகம்போலவந்த எரியின்மேலேநாண்டு விழும்புழுப்
போலே புரட்டிக்காணும், சீர்மேகமானவர்க்கு நாடிகாணுஞ்சீறிநிற்கு
ங் குருணடிதிறமாய்த்தானும், போர்மேகங்கடுத்திடுகில் வாதபித்தம்பி
ன்னியதுதுடித்துவரும்உற்றுப்பாரே. ௪௪

உற்றதொரு கெர்ப்பிணிக்குச்சேத்மபித்தம் உறுதியெனும்விக்க
லுக்குச் சேத்மவாதம், மற்றதொரு சுரந்தனக்கும் வாதபித்தம்வகையா
ன கணக்காய்ச்சல் பித்தம்வாதம், சித்தமுறுந்தலையிடிக்கும் பித்தமாகு
ம் சிரானசயரோகந் தனக்குபித்தம், குற்றமில்லையிதின்குணங்கள்மருந்
தாற்றீரும் குருவானபூரணத்தின்குறிதான்பாரே. ௪௫

அஷ்டகர்மப்பாவைதப்பனம்.

பாரப்பா பூர்ணகாவியத்திற்றானும் பாடினேன் அஷ்டகர்மப்பா
வைதன்னை, நேரப்பா அப்பாவைதன்னைநீயும்நினைவாகமனதினிலேநிறு

த்திக்கொண்டு, சாரப்பாவுனதறிவை மேலுக்கேற்றிச் சந்திரனைச்சூரியனிற்சாரப்பண்ணி, கூறப்பா அக்கினியிற்கூர்ந்துநின்றுகுணமானபறவைதனைக் குருவாய்போற்றே. ௪௬

போற்றியே நடுமனையினின்றுகொண்டு பூரணமாய்நயபயனவென்றேயோதி, பார்த்திபனே கருப்பூரதீபம்பார்த்து பாங்காசவிபூதியைநீ கையில்வாங்கி, நேத்தியாயனுதினமும் பூசிப்பூசி நீயிருக்கவதினுடையனேர்மைகேளு, பார்த்தபேர்சகலருந்தம்பனமேயாவார் பாலகனேபருபாத்தைப்பணிந்துபோற்றே. ௪௭

பணிந்துநின்ற பொற்பாவைதன்னைநீயும் பாலகனேசுழிமுனையான்மேருக்கேற்றி, அணிந்துநின்று யவசிவயவென்றுநீயும்அப்பனேசர்ப்பூர தீபம்பார்த்து, துணிந்துநின்றவிபூதிதனைக் கையில்வாங்கிச்சுத்தமுடன் * லலாடமதிற்பூசிவிட்டால், அணிந்துநின்றசத்துருக்கள்வசியமாவார் அனைவோருந்தான்வணங்கிநிற்பார்கேளே, ௪௮

* லலாடம் நெற்றி.

கேளப்பா பொற்பாவைதன்னைநீயுங் கொடியாகக்கேசத்தில்நிறுத்திக்கொண்டு, வாளப்பாபூரணத்தின் மனைசையூன்றி மயநயமவென்று நீமனதிற்கொண்டு, கேளப்பாகர்ப்பூரதீபம்பார்த்துவிபூதிதனை யுத்தளமாய் பூசிக்கொண்டால் கேளப்பா வொன்றுமில்லையெல்லாமோகங் குணமானபூரணத்தின் கிருபையாலே, ௪௯

கிருபையென்ற பூரணத்தாற் பாவைதன்னைக் கொச்சிதமாநடுமனையிலூட்டிக்கொண்டு, வருமமுடன் சிவயவசி வென்றுநீயும்மார்க்கமுடன் கர்ப்பூரதீபம்பார்த்துப், பெருமையுடன் விபூதியுத்தளமாய்ப்பூசில்போரானசத்துருக்கள் மரணமாவார்,அரூபமென்றபூரணத்தினுண்மையாலே யசையாதநோயெல்லா மகன்றுபோமே. ௫௦

போமப்பாபூரணத்தாற் பாவைதன்னைப் புத்தியுடன்சுழிமுனையிற் கண்டுகொண்டு, காமப்பாவசியசிவவென்றுநீயுங்கனமானசர்ப்பூரதீபம் பார்த்தே, ஓமப்பாவதுதினமும் பூசிக்கொண்டால் உன்னுடையசத்துருக்களோடிப்போவார், காமப்பாலகொண்டுநிதங் கருவினின்றுகண்மணியாற் சின்மணியைக்கண்டுபோற்றே. ௫௧

போற்றப்பாபொற்பாவைதன்னைநீயும் புத்தியுள்ளவறிவினிடம் பொருந்தவைத்து, பார்த்தப்பாநயநமநயவென்றுநீயும் பத்தியுடன்சர்ப்பூரதீபம்பார்த்துச், சாற்றப்பாவிபூதியைநீலலாடமீதிற் சகலருமேயாகிருஷ்ணமாந் தன்னைச்சேர்வார், காத்தப்பா பூரணத்தைப்பார்க்கப்பார்க்கக் கனமாய்தைதான்தீர்ந்துசோதியாமே. ௫௨

* ஆகிருஷ்ணம்- அழைத்தல்.

## விந்துவேதணம்.

சோதியென்ற பராஞ்சோதிப் பாவைதன்னைச்சுத்தமுடனுச்சியெ
ன்றமேருக்கேற்றி, நீதியுடன் வயசியவயென்றுநீயும்நிலத்துக்கர்ப்பூர
தீபம்பார்க்கே, ஆதியென்றவிபூதியைநீ கையிலவாங்கி அணிந்துகொ
ண்டால் வேதணமாமறிவாபாரு பதிமதியணிந்தபரன்கிருபை. பாலே
பருயாதின்குறிகண்டேயறிவாய்நில்லே. ௫௧

நில்லென்றநிலைதனிலே நின்றுகொண்டு நிலையாதபொற்பாவைநி
னைவிற்சேர்த்து, சொல்லுமென்றமந்திரந்தான் சியயசியென்றுசொல்லி
யேகர்ப்பூரதீபங்கொணடே, அல்லுமேவிபூதி யுத்தளமாய்ப்பூச அனை
யோருமுனைக்கண்டாற்பேசலிப்பார், வெல்லுமேயட்டகர்மமெட்டுமாடு
ம் விதமாகக்கண்டறிந்துமேலைபாரே. ௫௨

## பேதகளம்.

மேலானகுதம்பத்தை யுற்றுப்பாருமேன்மையுள்ளமூன்றெழுத்து
மொன்றாய்க்காணும், காலானவாசியிடவெழுத்துமங்கே சனமானபிரமா
வின் கருணையங்கே, மாலானமாவினிடபதியுமங்கே மந்திரங்கண்மூன்
றெழுத்தாம் மறை தங்கே, சேலானசெயலறிந்தாலெல்லாமுண்டுசெ
யலறியச்சற்குருவைத்தேடிப்பாரே. ௫௫

## முப்பூ.

பாரப்பாவின்னமொரு செய்திசேளு பதிலானமுப்பூவையறிய
வென்றால், பேரப்பாசொல்லுகிறே னன்றாய்க்கேளுபெருமையுள்ளபி
றப்பிறப்பு மகற்றுமூலி, வேரப்பாவடிமுடிநடுவுமாகிவேதாந்த சித்தாந்
தாந்தமாகி, காரப்பாவாலையுடன் புவனையாகி கருணையுள்ள திரிபுரை
யின் கண்மூன்றுமே. ௫௪

மூன்றானபூநீற்றைச் சலத்திற்கொட்டி மூந்துபோற்றெளிவிறு
த்ததைந்துவிளைகையாய்ச்சு, ஈன்றானவெடியுப்புப்பலந்தானுநாட்டதிலே
சினமோடிந்திரண்டே, ஒன்றானசத்திபெட்டுச்சோடசந்தானுத்தமனை
கல்வத்திலிட்டுக்கொண்டு, சென்றாட்டவெண்கருவி லெருக்கம்பால்வா
ர் சிறந்தபழச்சாறாட்டி யரைத்துப்போடே, ௫௭

## சவர்க்காரவைப்பு.

போட்டரைக்கச் சூடெருக்காசுபோடு புகழானசாக்கெல்லாஞ்
சேரவொன்றாய், நீட்டரைக்கசாமம்ரண்டுக் கதிகம்வேண்டாம் நிலையா
னவில்லைசெய்து நினைவாய்க்கேளு, காட்டையாரவிதனிலே காயப்போ

டு கனமான கண்ணூம்புக் குள்ளேவைத்தே, ஆட்ட முடனடுப்பேற்றிஎ ரிப்பாய்சாமம் அத்தோடேவாங்கிமெல்லப் புடத்தைப்போடே. ௫௮

புடமெடுத்தோறவைத்துப் பூரணத்தைநோக்கிப் புத்தியுடன்று னெடுக்கவெளுத்துநீறும், சூடமெடுத்தவெண்ணை மின்னுள்மாவின் றேவி குதிகொள்வானும் முகத்திற்குறைவொன்றில்லை, கறுவிடமெடுத்தசவ ர்க்காரக்குருவிதாச்சுவெள்ளாட்டிற்கெதிர்ப்பட்டவேங்கையாச்சே, ௫௯

முப்பூவின்பெயர்,

வேங்கையென்றதுப்பூவின்பேர்தான்கேளுவெறித்தசிங்கம் பேர ண்டம்வெள்ளச்சாரை, தாங்கையென்சிறுநாகம் பட்சிராசன்சாக்கான செந்துவிற்குக்காலன்காலன், பாங்கையெல்லாங்கண்டவனே வாசஞானி பதிவானவண்டமடா ஆதியுப்பு, ஓங்கியென்றசத்தியுப்புவழலையுப்பாம் உ ண்மையுள்ளநாதவுப்பைவுகந்துகேளே, ௬௰

நாதவுப்பின்பெயர்.

உகந்துநின்றநாதமடாவாலைவாலை ஓங்காரறீங்கார ஒருமைப்பிள் ளை, செகந்தனிலேதிருவென்றுஞ்செந்தியென்றுந்திட்டானதிட்டருக்கு ஞ்செல்வியென்றும், அகந்தனிலே யமிர்தமென்றுஞ் செந்தேனென்று ம் அன்பானவிஷமென்று பேச்சியென்றும் முகந்தனிலேசிந்தூரந்தில தமென்று மோனமுள்ளவாலை டாசத்திகேளே. ௬௧

சத்தியென்றவுப்பினிடபேரோதென்றுற் றயங்காததுரிசையென் றுங்காரமென்றுஞ், சித்தானகெந்தமென்று மண்டானென்றுஞ்சிவசிவா வன்மையத் தன்மமென்றும், உத்தியென்ற பராசத்திபெருமைக்காரி யொடுங்காதவாசமுள்ளவியோமசித்தி கற்றூனு மனம்பதருங் கைகால் கூசுங்கருணையுள்ள சத்தியைநீ கண்டாற்றுனே. ௬௨

சத்தியுப்புவழலைப்பெயர்.

தானெனவழலையிடிபேர்தான்நீகேளுகருவானவண்டநீகாரிதானென் று, கோனெனகொடிமுடியாம் பொதியிலென்றுங்குருவான பீடமென்று ங்குறுக்களென்றும், தீதனெசோதியென்றுந்தீபமென்றுந்தெவிட்டாத வமிர்தரசவாக்கியமென்றுங், கானெ பூரணமாம்வழலையென்றுங் கண்டு பார்முப்பூவின் கருவிதாமே, ௬௩

ஆமப்பா முப்பூவுமொன்றாய்க்கூடி யாதியிலே முமூர்த்தியானு ர்பாரு. காமப்பால்கானற்பாற்சோமப்பாலுங்கலந்துநின்றாவிமதியுமக் கினியுமாகி, ஓமப்பா மூலமுதலாறுமாகி உடன்சேர்ந்த பொருள்தனை உ

ற்றுப்பாரு,காமப்பா முப்பொருளின் றிதற்குப்பேரு தண்மையுள்ள மூலமுதன் முடிவரையுமென்னே. ௩௪

என்னவே யின்னம்வெகுபேர்களுண்டா மென்மகனே புத்தியினுலறிந்துகொண்டு, சொன்னகாரு காருமானமேதென்றாலேசொல்லறிந்துசொல்லுகிறேன் பிண்டம்பிண்டம், மன்னவனே பிண்டமென்றால்மலைக்கவேண்டாம் மந்திரகலைமூலமலர் பூக்குங்காலம்,முன்னமேயக்காலமறிந்துமைந்தா முத்திகொண்டாதமதில் விந்தைபாச்சே. ௩௫

பிண்ட அண்டம்,

விந்துவினிலேயறிந்துவிந்துபாயுங்காலம் வேராந்நாதமதுக் குயிருண்டாகி,சொந்தமுடனேயிரண்டு மணியுமாகிச் சோதிமணியானதுவும் பிறையுமாகி,வந்தமதிப்பிறையதுவும்வட்டமாகிவட்டமதிரண் டுருவாய் மன்னுமாகி,அந்தமுள்ளமண்ணுகறி உப்பாய் னின்றேயாதியென்ற பொருளான பிண்டமாச்சே. ௩௬

பிண்டமென்ற சுவர்க்காவித்தைதன்னை பேருலகிலாறியப்போறாப்பா, கண்டவர்கள்கோடியிலே யொருவருண்டு தைம்முறையாயவர்காட்டிற்குருவுந்தோன்றும்,பண்டபண்பாகதின் றபூரணத்தைக்கண்டாற்பாலகனேமுப்பூவு நன்றாய்த்தோன்றும்,விண்டதில்லை கண்டவர்கள் சொல்லார்சொல்லார் வீணுகச்சுட்டலைந்து விதியென்பாரே. ௩௭

விதியானவிதியறிந்தோன் வாதங்காண்பான் விதியறியான்பதியறியான்வீணன்வீணன், சதியாகமுன்சொன்னமுப்பூவாலே சகலதொழில்கைம்முறையாய்ச்செய்பலாகும்,பதியானபதியறிந் தேயமிர்தமுண்டு பாலகனேவாடமதிற் பற்றிக்கொண்டு கெதியானமோட்சமென்னின்றுயானுற் தேசாந்திற்கேசரியாள் கிருபையாமே. ௩௮

வசியத்திற்கு விபூதி.

கிருபையுள்ள புலத்தியனேவசியமொன்று செணிதமுடன்சொல்லுகிறேனன்றாய்க்கேளு, கருவமுள்ள வரித்திரபூமியிலே,சென்றுசுகமாக வெந்தஅஸ்திவெடுத்துமைந்தா. அருவமுள்ள அஸ்தியுடன்விஷ்ணுமூலி ஆதிசத்திதன்னுடைய வேருங்கூட்டிக், கருவையினிச்சொல்லுகிறேன்கலசப்பாலாற் கருணையுடன் றனைத்தேயுண்டைசெய்யே.

செய்யடாஉண்டைதனை யுலரவைத்துச் செம்மையுடனொருவடுக்கி ப்புடத்தைப்போடு, மெய்யடாசொல்லுகிறேனீறிப்போகும்வேகாந்தமா னதொருநீற்றைவாங்கி, வையடாசவாதுடனேபுனுகுசேர்த்து மார்க்கமு டன் அங்கெனவேலட்சமோதி, மையமென்றநெற்றியிலேவிபூதிபூசிமார்க் கமுடன் அரசரிடஞ்சென்றுபாரே, ௭௰

சென்றுமிகநின்றுடனேயிராசமோகம் சிவசிவாகசேகமோகம்ஸ்ரீவ சியமாகும், அண்டர்பிரானருள்பெருகிவசியமுண்டாம் அப்பனேஓம்கி லியும்ஸ்ரீயுமென்று, பண்டுபோலிலட்சமுருவேற்றிப்பின்னர்பாலகனே ல லாடமிதைப்பூசிச்சென்றால், தொண்டரென்றேசத்துருக்கள் வணங்கு வார்கள் துஷ்டனென்றமிருகமெல்லாம்வசியமாமே. ௭௧

வசியக்காப்பு.

ஆமென்றவசியமொன்றுசொல்லக்கேளு ஆதிமுதலானகொடியறு குவாங்கி, ஓமென்றுகண்டித்து மதுவிற்போட்டே ஒருமையுடன்மண்ட லஞ்சென் றெடுத்துப்பாரு, நாமென்றநீரதுவே நன்றாய்வற்றி நடுவான கொடியதுவும்பதமாய்நிற்கும், தாமென்றுதன்மயமாவந்தமூலந் தருவா னமூலமதின்றன்மைகேளே. ௭௨

தன்மையென்ன வெள்ளியுடன் செம்புசேர்ந்து தருவானதங்கமது மூன்றுமொன்றும், எண்மையுடன்தானுருக்கித்தகடுதட்டி உறுதியுள்ள மூலமதைவைத்துருட்டிச், செம்மையுடன் ரவிவளையம்போலேசெய்து தெரியாமற் பொதிந்ததின்வாய் சேர்த்துக்கொண்டு, நன்மைபெறச்சற்கு ருவைத்தியானம்பண்ணி ஞாயிறிலேசத்திமுன்புவைத்துப்போற்றே.

வைத்தெடுத்தாரவிவளையம்விளக்கித்தன்னை வலதுகையிற்றான் பூ ட்டியிருப்பாயானால், மைத்திகழும்விழியாருமன்னர்கூட்டம் மகத்தான மிருகமுதல்வசியமாகும், மெய்த்ததோரிம்முறைதான்அதிகவித்தைவே தாந்தபூரணத்திலவிண்டமார்க்கம், உற்றதொருசேதிதன்னையுலகத்தோ ர்க்கேயுரையாதேயுரைத்ததினாலுறுதிபோமே. ௭௪

வசியமை.

போக்கான இன்னமொருவசியங்கேளு புகழ்பெரியஆவின்கோரோ சனைகர்ப்பூரம், வாக்கான () கண்ணனிடமூலிவேரும் மகத்தானசந்தன மும்புனுகுங்கூட்டி, தாக்கானமந்திரன் ஓம்ரீங்வசிசர்வமோகினி வசிமெ ன்றேயோது, தேக்கானதில்லைநடமாடும்போலே சேர்ந்துவெல்லாந்தேடி நின்றுகதறும்பாரே. ௭௫

() கண்ணனிடமூலி - விஷ்ணுக்கரந்தை,

பாரப்பாகிராம்பொன்றுகூடஞ்சேரிற் பரைவசியம்ஜோவசியம் இர ண்டுமோடும், நேரப்பாஉள்ளங்கையுள்ளங்காலில் நின்றமுக்குஞ்சவ்வாது ஞ்சேர்ந்துதானல், தேரப்பாமந்திரத்தை யென்மசொல்வேன் திரி லோ கமூன்றுமேவசியமாகும், காரப்பாமந்திரத்தைலட்சமோதில்கருவியெல் லாம்வசியமடாகண்டுபாரே. எசு

## உருமாற்றமை.

வசியமென்றமாற்றமொன்றுசொல்லக்கேளு வால்நீண்டு இருக்கின் றகரிச்சான்பிச்சு, வசியமென்றபச்சோந்திபச்சைப்பாம்புவண்மையுள்ள பாம்பரணைபிச்சுங்கூட்டி, வசியமென்ற கரும்பூனை கருங்குரங்குமார்க்க மூள்ளகண்ணிரண்டும்பிச்சுங்கூட்டி, வசியமென்ற யானைக்கண் கட்டித் தூரில் மார்க்கமுடன்றான்கருக்கிகல்வத்தாட்டே. எள

ஆட்டுவாய்புனுகுடனேசவ்வாதுகூட்டி அப்பனேகூதகமாநாதம்வி ட்டே, ஆட்டியேயானையிடதந்தச்செப்பில் அப்பனேவழித்துவைத்துப் பதனம்பண்ணி, ஆட்டென்ற தாம்பரத்திற்சீலைசுற்றி அப்பனேவையாட் டான்மைகாணுது, ஆட்டினதோர்மையதனிற் பணம்போல்நெற்றில் அ ணிந்திடவேனின்னுருவமாருங்காணர். எஅ

காணுதேபோகுமடாமையின்சூட்சம் கருவாகஉலகத்தோரறிந்தா ராஞல், வீணுகப்போகாதுகொலைகள்செய்வார் விருதுபெற்ற சித்தருன் னைவைவாரப்பா, தோணுதமையிதனைவைத்துக்கொண்டு துருவமென்ற ஆயிரத்தெட்டிதழினின்றல், காணுதுகருவிதொண்ணூற்றாறுமுன்னை க்கைலாயத்திருநடனங்காணுவாயே, எகூ

## தூரத்துசெய்தியறியுமை.

காணுதற்கேயின்னமொருகருவைக்கேளு காசினியில்வேரெல்லாய் காய்க்கும்பூக்குந், தோணுதற்குற்சொன்னபலாவேரைமைந்தாசுத்தமுட ன்றானுலர்த்தி நறுக்கிக்கொண்டு, பூணுதற்குமால்தேவி நருக்கிக்கொ ஞ்சம்புத்தியுடன்பாம்பரணைபிச்சுங்கூட்டி, ஆணுவத்தான்மூன்றுமொ ன்றாய்ப்பொடித்துக்கொண்டேவப்பனேஅயக்கரண்டிதன்னிற்போடே

தன்னிலேபசுநெய்பால்வறுத்துக்கொண்டு சாதகமாய்காகிதத்திற் றுமாவிவைத்தே, உன்னிதமாய்ப்பசுநெய்யாலமைத்துமைந்தா உறுதியு ள்ளதங்மென்ற செப்பில்வைத்துத், தன்னிலையைத்தானறிந்து தியானஞ் செய்து தன்மையுள்ளவெற்றிலையிற்றடவிப்பாரு, உன்னிதமாய்வெகுதூ ரமுள்ளசெய்தி உறுதியுடன்தோணுமடாவுற்றுப்பாரே, அக

தோணுமப்பாவெளியிலுள்ள வஸ்துவெல்லாஞ் சூட்சமாயிம்மைக் குச்சாபமில்லை, காணுமப்பாபாலர்முதல்கிழவர்மட்டுங் கருணையுள்ளபூரணத்தின்கடாட்சத்தாலே, ஆணுவமாயிம்மையைவெளியிடாதெ ஆதிசத்திபஞ்சணுதேவிபூசை, பூணுமப்பாமெய்சுருக்கந்தன்னிற்சொன்ன புத்தியுடன்அனுதினமும்பூசைபண்ணே. அ௨

பெண்ணுக்கும்ஆணுக்குமருந்து.

பண்ணப்பாவின்னமொருகருவைக்கேளு பச்சோந்திப்பிச்சுடனேயாடையொட்டி, நிண்ணப்பாசிணுங்கியொடுசிறியநங்கை நிலையாதவீசுரமாமூலிவேரும், கண்ணப்பாபொன்னூமத்திலைபுங்கூட்டிக் கருவாக்குமரியிடாதத்தாலே நண்ணப்பாமைபோலேயரைத்துநீயுநலமானமிளகதுபோல்குளிகைசெய்யே. அ௩

இடுமருந்து.

குளிகைதனைச்சிமிழ்தனிடையத்துக்கொண்டு குருவானமனோன்மணியைக்குருவாய்ப்போற்றி, குளிகைதனைதம்பனத்தான் மோகனமோதிக்குணமாகவிந்துநனின் மந்திர்த்தேதான், குளிகைதனையறுசுவையில்விட்டாயானல்கும்பிட்டுமெத்மயங்கிமோகமாவார், குளிகைதனைகொடுத்துவிட்டுமோகியாதே குணமாகப்பொருள்பரித்துயருளேத்தேடே. அ௪

சண்டமாரும்,

அருளானபெண்களிடபுருஷர்தானும் அயலாரைமோகித்தே யகல்வாரானல், வெருளாதேயவனுதந்தன்னிற்சேர்த்து வேணபடியறுசுவையில்தாக்கச்சொல்லு, இருளானவெளியாசையொழிந்துநல்லஇல்லிடமேவணங்கிமிக இணக்கமாவான், பொருளானபொருளப்பாவெளியிடாதே பூரணத்தார்காரணத்தைப்புகன்றிடானே. அரு

திரிபுகை.

புகன்றிட்டேனின்னமொரு வித்தைகேளு புகையானதிரிபுகைதான்புனிதமாக, அகன்றிட்டகருங்கழுதைச்சடைதானென்று அப்பனேயதின்கஷ்டம்நாயின்கஷ்டம், புகன்றிட்டதாய்பரத்தின்கீலேயோடு பூநீறுஞ்சவர்க்காரஞ்சாரங்கெந்தி, இகழ்ந்திட்டவெடியுப்புங்கழஞ்சுவீதம் என்மகனேபொடிசெய்துதிரியிலூட்டே. அசு

பூதமாரணம்.

ஊட்டியேகருங்கழுதைநெய்யின்மைந்தா உத்தமனேதிரிகனைத்துத்தீபமெற்றிக், காட்டியேதானவித்துப்புகைக்கும்போது நனமானபேம்

ப்பூதக்காணுதோடும், நாட்டியேதுஷ்டதேவதைகளெல்லாம் நாடாமற் கோயில்விட்டுக் காட்டிற்போகும், தாட்டிகமாய்ப் பச்சைமரம் பட்டுப் போகும் தண்மையுடனிப்புகையைவெளிவிடாதே. ௮௭

வெளிவிட்டாலுலகத்தில் துஷ்டருண்டு வேடிக்கைபோலவருஞ் செய்துபார்ப்பார்,விழிகெட்டகுருடரைப்போற்றெய்வமெல்லாம்வீடுவி ட்டுக்காடுறையும்விதியோவென்று, பழிவிட்டுப்போகாது நின்னையுற்றுப் பத்திரமாயிந்நூலைப்பதனம்பண்ணு, வெளிதொட்டே யொளிகொண்ட ஞானியானால் விஸ்தாரமாகவிதைச்செய்யார்பாரே. ௮௮

சத்துருமாரணம்.

பாரப்பாபூதமாரணத்தைச் சொன்னேன் பதியானபுலத்தியனேப கைவரெல்லாம், வீராப்பாதானடங்கிமரணமாக விதமானகருவொன்று விளம்பக்கேளு, நேரப்பாசெங்கொட்டைசூதநாபு நெறியானகௌரிவெ ள்ளைரத்தப்பாஷாணம், ஆரப்பாகார்முகிலு மெலிப்பகையுங்கூட வப்ப னேசெந்தோன்றிக்கிழங்கும்கூட்டே ௮௯

கிழங்குடனே குருவண்டுங் கழுதைவண்டுஞ் சொற்பெரியபாசம்வி ளைபன்னிரண்டு, இணையாகரஞ்சாடிவீதங்கூட்டி என்மகனேயிராகுவி ன்றீவிஷத்தாலாட்டிக், கனமானகுழம்புபோல் எண்ணிக்கொண்டு கரு ணையில்லாச்சத்துருக்கள்காலிற்றூக்குத், தினவானுலெடுக்குமடாகுழம் பின்வேகந் தீராதசொரியுடனேகுஷ்டமாகும். ௯௰

அதற்குமுறிவு

குஷ்டமொடுகுழிவிழுந்து கரைந்துசாவான் குடிகெடுக்கும்பாவிக ளுக்கிதுவேவேண்டும், கஷ்டமுற்றுப்பாவிகள்தான் றிரும்பிவைத்துகா விலேபணிந்திட்டால்கருதக்கேளு, மட்டமென்றவருகதுவேர் பிடிதான் மைமந்தா மார்க்கமுள்ளவெண்குன்றியிலையிலையவ்வீதஞ், சட்டமாயரைத் ததனைமேலும்பூசிற் றண்மையுடன்றுன்குடிக்கச்சாந்தமாமே. ௯௧

சாந்தமென்றேயிக்குழம்பை யுலகத்துள்ள சகலருக்குஞ் சொல்லா தேசபிப்பர்சித்தர், காந்தளென்றகாந்தறனைவிடுத்தோருண்டுகருவானவ ளரியோர்கள்பெரியோருண்டு, வேந்தரென்றவேந்தருண்டுசிசுக்களுண்டு வித்தைசொன்னகுருவுண்டுபெண்களுண்டு, பாந்தமுடனிவர்களுமேகு ற்றஞ்செய்தாற் பதறுதேபதறினதாற்பாவமாமே. ௯௨

பாவமென்றபாவமதுசெய்யநன்றே பலபேதசாத்திரத்தைப் பார்க் கநன்றே, தாமென்றதாராசுக்குதோமமாகா தண்மையில்லாக்கோபத்

தாற்றபசுபாழாம்சோபமென்றபெண்கண்மேன்மோகம்வேண்டாஞ்சொ ந்தமனையிருந்ததாலுற்றேஷமில்லை, கோயிலென்றுங் குளங்களென்றும் தேடவேண்டாங் குணமாகவுன்னிடத்திற்குறிதான்காணே. ௬௩

## ஞானம்.

காணுதற்கேயின்ன மொருகருவைக்கேளு கருணையுள்ளபுலத்திய னேகணிதவானே. பூணுதற்குநவ்வெழுத்தின்மேலேமைந்தா புத்தியுட ன்மவ்வெழுத்தாற்சிகரந்தோன்றும், பேணுதற்குமவ்வெழுத்தின் மே லேசென்றால் பிலமாகமவ்வெழுத்தின்கீழ்தாகத், தோணுதற்குச்சிவா லயமுநதியுமுண்டு சுத்தமுடனவ்விடத்தேகண்டுதேறே. ௬௪

கண்டுமனந் தேர்ந்ததந்த நதியின்மூழ்கிக் கமலமலர் சிவாலயத் தைப் பூசைபண்ணில், தண்டமென்றபூரணத்தில் கீழ்தாகச் சபையா னசிவாலயங்கள் னதிகளுண்டு. கொண்டுநின்றஅநேகதமா மயிர்ப்பால த்திற்கொள்ளாநின்ற சிவாலயங்கண திகளுண்டு வண்டெனவேவாசிமலர் தனையெடுத்து மகத்தானசிவாலயத்தைப்பூசைபண்ணே. ௬௫

பூசையதுசெய்வதற்குப் பலத்தைக்கேளு புனிதமுடனட்டாங்கஞ் சித்தியாகும், நேசமுள்ள அட்டாங்கஞ் சித்தியானால் நிலையானசிவயோ க நினைவிற்றோன்றும், பாசமில்லாசிவயோக நினைத்தபோதே பரமகுரு தேசிகனும் பதிவாய்வந்தே, ராஜனென்ன சிவராஜயோகங்காட்டிநடுமனை யின் பூசைவகைநல்குவாரே, ௬௬

வகையானபரமகுரு வருவதேது மார்க்கமுள்ள சரிதைவழி மார்க் கத்தாலே, இகையாமற்சரிதைவழிநடந்தாயானாற் சிவகிரியையதின் வழியேதோன்றும், பகையாமற் கிரியைவழிநன்றாய்ப் பார்த்தாற் பாலக னேயோகவழி பரிவாய்த்தோன்றும், நகையாமல் யோகவழி நன்றாய்ப்பா ர்த்தால் நன்மையுள்ளஞானவழி நாடும்பாரே. ௬௭

பாரப்பாபுலத்தியனே பிரமக்கியானி பரிவான ஞானமதைப்பகரக் கேளு, காரப்பாஆதாரமூலந்தன்னிற்கனிவான அக்கினிதன்னுவிதன்னை ச், சேரப்பாமுக்கோணச்சுடரிநின்று திருவாசியானதொரு செங்கண் மேவிச், சாரப்பாவந்தமனைசொந்தமென்று சங்கையுடன் ளுனிருந்துத ன்னைக்காணே. ௬௮

காணப்பாமேல்வழியைக் கண்டுகூடிக் கருணையுடனவ்வழியைக் கலந்துமேவிப், பூணப்பா நிராதரஞ்சித்தமாகிப் பூரணமாய்நின்றபூரண மதாகித், தோணப்பாசிவனயன்மாற் பூசைசெய்து தொடங்கிநிறைதீவி

ளைகளிரண்டுமேற்றுப், பேணப்பா பிரபஞ்சத் தாசையற்றுபேரண்டச் சோதியிலே புகுந்துவாழே. ௬௯

புகுந்துமிகவாழ்ந்ததிறற் பலத்தைக்கேளு புனிதமுடன்பிறப்பிற ப்புமற்றுநல்ல, ஜெகச்சோதியாகமதிற் சேர்ந்துவாழ்வாய் திருவானபூர ணத்தின் கிருபையாலே, இகழ்ந்துநீ மனமொத்துப் பாராவிட்டாலெ ண்ணவொண்ணாப் பிறப்பிறப்புமெய்துஞ்சொன்னேன், தகுந்தவொரு ஞானத்தின்றன்மைகண்டால் சாயுச்சியபதவியிலே சாரலாமே. ௱

சாராமற்காயசித்தி செய்துநீயுஞ்சமர்த்தாக வுலகத்திற்சஞ்சரித்தா ல், வீரானஆணுவத்தைவிட்டுமைந்தா விருதுபெற்றசித்தனென்றேவிள க்கமாகத், தாரளமாகநீசரக்குவைப்புந் தன்மையுள்ளவைத்தியமுந்தா னேசெய்து, போராதமுப்பூவால்வாதங்கண்டு பேரின்ப நிலைகாணப்பெரு மைகேளே. ௱௧

## வைச வீர வைப்பு.

கேளப்பாபச்சையென்றுஞ்சரக்குவைப்பு கெடியானவைசவீரவைப் புக்கேளு, நாளப்பாகெந்தகந்தான் பலமிரண்டுநன்மையுள்ளபுத்தோட் டிலுருக்கிக்கொண்டு, வேளப்பாசூதமதிற் பலந்தானெட்டு விட்டதிலே கிண்டையிலேயனல்படாதே, கூழப்பா போலவுமே ஆயத்தாற்கிண்டு குணமானரசமதுவு மடிந்துபோமே. ௱௨

போமப்பாகரிபோலே சூதந்தானும் புத்தியுடன் பொடிசெய்து தோண்டிக்கேற்றி, நாமப்பா மறுதோண்டிகவிழ்த்துமூடி நன்மையுட னுமுந்தனைத்துச் சூலைசெய்து தாமப்பாவதின்மேல் மண்சீலையைந்துத ளமாகச்செய்ததையுங் காயவைத்து, ஓமப்பாகணபதிக்குப் பூசைசெய் து உத்தமனேயடுப்பேற்றி மூன்றுசாமம். ௱௩

சாமமடாதீபம்போலெரித்துநீயுந் தண்மையுடன்முனிறக்கிப் படுக் கப்போடு நேமமுடனாறினபின்னவிழ்த்துநீயும் நினைவாகமேற்றோண்டி யெடுத்துப்பாரு, தாமமுடன்மாப்போலே யிருக்குஞ்சூதந் தனையெடுத் துநிறைக்கவுமே குறையாதப்பா, வாமமுடன்சூதமென்ற மாவுதானும் மைந்தனேபலமெட்டுமிருக்கும்வைத்துக்கொண்டே. ௱௪

கொண்டதொருவெடியுப்புத்துருசுசீனம் குணமாகவகைக்கிரண்டு பலந்தான்கூட்டிக், கண்டதொருநவாச்சாரம்பலமூனாலு கனமானபூநீறு பலமதொன்றே, மிண்டதோரன்னத்தின்பேதிதானும் உத்தமனேபல மூன்றுகல்லுப்புத்தான், பண்டையிலேசேர்த்தாப்போல்பலமிரண்டுபா லகனேகல்லுப்புந்துருசுங்கேளே ௱௫

கேளப்பாவெளுக்கவே வறுத்துக்கூட்டுக் கிருபையுள்ள எழுசர க்குநன்றாயாட்டி, மாளப்பாபாச்சூதஞ்சேர்த்துநீயும்மார்க்கமுடன்றுன ரைத்துக்காயவைத்து, கேளப்பாகாசியென்ற குப்பிக்குத்தான்குணமா கவைந்துமண் சீலைசெய்து, தாளப்பாவாராமற் காயவைத்துத் தண்மை யுள்ளகுப்பியதை மருந்தையேற்றே. ௱௬

ஏற்றியேநாற்சதுரமாடம்போலே இதமானதுஅடுப்புமேகிழக்கதா கப், பார்த்தினேநீயிருக்கவடக்குத்தானம்பாங்கான அடுப்புமட்டங்கி ண்ணேபோட்டுப், போற்றியேபுகைபோக மேற்குத்தானும் பூமிமட்டுங் தரையோடே பொதிந்தவைத்துச், சாத்தியேசாந்தாலே நன்றாய்த்தித்தி ச்சமர்த்தானகணபதிக்குப்பூசைபணனே. ௱௭

பண்ணப்பாவாலுகையில் தாளியொன்று பாங்காகஅடிதனத்தபா ண்டமேற்றி, நண்ணப்பாபொடிமணல்நால் விரன்மட்டிட்டு நாதாந்த ம னோன்மணியைத்தோத்ரஞ்செய்து, கண்ணப்பாமேல்நோக்கி தீபம்பார் த்துக் கருணையுள்ளகுப்பிதனை யதன்மேல்வைத்து, மண்ணப்பாகழுத்த ளவு மணல்தானிட்டு மார்க்கமுடன்கமலம்போலெரித்திடாயே. ௱௮

எரித்திடவேபன்னிரண்டுஜாமந்தானும் என்மகனேயெரிக்கும்வித ஞ்சொல்லக்கேளு, பொருத்திடவே பகலைக்கேயெரித்துநீயும் பத்தியுட னிராத்திரிக்கவ்வடுப் போடேவை, மறுதினமும்சகலைக்கண்டெரித்துநீயு ம் மாற்றிவைக்குமூன்றுனாளெரிக்கும்போது, முரித்திடவே யனல்வீற வெரித்திடாதே முன்போலநீயெரித்துச்சிலாகைப்போடே. ௱௯

சிலாகையிட்டு நீகிண்டிப்பார்த்தாயானால் தீர்க்கமுடன்வெண்மை யாக்குப்பிவாயில், நிலாவதுபோல்வெண்மையாய் மூடிக்காணும் நிலவர மாயடியிலேகறுகறுத்து, கலகைமகுசிலாகையிலேகாணுமானால் கனமா னபதமிதென்றுமண்டுகொண்டு, பலதகையிலிருக்காமல் அனலையாற்று பாகமடா அவ்வேளைபரிந்துபாரே. ௱௰

பாரடாகுப்பிதனையெடுத்துநீயும் பத்தியுடன்குளிர்ந்தபின்னருடை த்துப்பாரு, நேரடாவீரமதையென்னசொல்வேன் நிசமானபூரணச்சந்தி ரனைப்போலே, பேரடாபெற்றதொரு வீரமாச்சுப்பெலமாகமுன்மருந்தி ற்பாதிசேர்த்துக், காரடாமுன்போலேமுவிசை செய்திட்டால் கனமான சொக்கியென்றவீரமானே. ககக

## இரசகர்ப்பூரவைப்பு.

வீரமென்றவீரவைப்புக் கைம்முறையாய்ச்சொன்னேன் விருதான பூரவைப்பையினம்பக்கேளு, நேரமில்லைமுன்செய்த சூதமாவில்நிறுத்

நிறுத்தெடுத்துநாலுபங்குகுப்பிக்கேற்றி, பாரமில்லாவாலுகையிற்காலம்போலே பதமாகஎரிக்கையிலேயுருகும்பாரு, வோரமில்லையுருகுபதந்தன்னைக்காண உறுதியுடனிருசாமமெரித்துமேலே. ௧௧௨

மேலாகச்சிலாகையிட்டுக்கிண்டிப்பாரு மேன்மையுடன்றானுருக்கிக்குழம்புபோலாம், காலானசீனம்அரைப்பலத்தைத்தானுங் கணக்காகப்பொடித்ததிலேபோட்டுக்கிண்டி, நாலானசாமமட்டும்எரித்து நீயும்நன்மையுடன் சிலாகையிட்டுப்பார்த்தாயானால், கோலானஅடியின்மருந்தில்லாவிட்டால் குருவானபதமென்றுகுணமாயாற்றே. ௧௧௩

சூடன் வைப்பு.

ஆற்றியேகுப்பிதன்னை யுடைத்துப்பாரு அப்பனேவெள்ளையாயிருக்குஞ்சொன்னேன், போற்றியேபூரவதைப்பதனப்பண்ணு புண்ணியனேயின்னமொருவித்தைகேளு, சாற்றுகிறேன் ஆலாத்திப்பூரவைப்பைத்தண்மையுடன்றானுரைக்கத் தயவாய்க்கேளு மேற்றோலைப்போக்கினதோர்*முத்தக்காசும்விளங்கியலவங்கமிடைவராகன்பத்தே. ௧௧௪

* முத்தக்காசு கோரைக்கிழங்கு.

பத்தானசீனமதிரண்டுபத்துப் பாங்கானவெடியுப்புநூறுங்கூட்டி, சித்தானகல்வத்திற் பொடித்துக்கொண்டு சிவந்தகருவாப்பட்டைத்தயிலம்வாங்கி முத்தானமிச்சாமமரைத்துமந்தா முறையுடனேயிட்டுப்போலுதிர்த்துநான்கு, வற்றுதகங்காலக்குப்பிதன்னில் மார்க்கமுடனவாவாசிபடைத்துக்கேளே. ௧௧௫

கேளப்பாமாக்கல்லா லடைத்துநீயுங் கிருபையுடனேமூசிலைமண்ணுஞ்செய்து. நாளப்பாநன்றாகக்காயவைத்து நாதாந்தவாலைபத நாடிநின்று, வாளப்பாவாலுகையிற்பாண்டம்வைத்து விதமாகஆறுவிரல்மணல்தானிட்டு, வாளப்பாகுப்பிதனைமேலேயிட்டு வண்மையுடன்பானைரம்பமணலால்மூடே. ௧௧௬

மூடியேயடுப்பேற்றிக் கமலம்போலே மூர்க்கமுடனொருநாழியெரித்துப்பாரு, நாடியேமணற்சூடுநிரம்பவானால்நன்மையுடன்பாண்டமதையிறக்கிவைத்துக், கூடியேகுளிரநன்றாயாறவிட்டுக்குருவான குப்பிதனையுடைத்துப்பாரு தேடியேயலைந்தாலுமிந்தப்பூரம் தேசத்தில்விபீசமென்பார்காணே, ௧௧௭

பச்சைகர்ப்பூரவைப்பு.

காணப்பா இன்னமொருவைப்புக்கேளு கருவானபூரமடாபச்சைப்புரம், பூணப்பாசூடனொருபலமும்வாங்கிப் புனிதமுள்ள வெடியுப்பு

க்காற்பலந்தான்,தோணப்பாவுலகுப்புப் பலமரைதான்கூட்டி துரிதமு ள்ளபுனுகுடனே ஏலக்காணும்,வேணப்பாகஸ்தூரி வகைக்குத்தானும் விளக்கவேயரைகூழுஞ்சி வேண்டுவாயே. ௧௧அ

வேண்டியேகல்வத்திலரைத்துநன்றாய் விதமானசந்தனத்தின்தயி லத்தாலே,தோண்டியேயிட்டுப்போற் பிசரிக்கொண்டு சுத்தமுள்ளகு ப்பிபரையிட்டுமைந்த' தூணடியேமாக்கல்லால்வாயைமூடி துரிதமுட னெழுசீலை மண்ணுஞ்செய்து, தாண்டியேதாளிரையமணல்தானிட்டுத் தன்மையுற்ற குப்பிவைத்து மேலுமூடே. ௧௧௯

மூடியேமணற்செய்மி யோடுமூடி மூர்க்கமுடன்சீலைமண் வலுவா ய்ச்செய்து, நாடியேயாவிதனிலேகாயவைத்துநன்மையுள்ளகணபதியை நாடிக்கொண்டு, தேடியேவாலுகையி லேற்றிமைந்தா திறமாகவொரு சாமந் தீபம்போலே, கூடியேயெரித்துமெல்லஆறவைத்துக்குருபதத் தைதான்வணங்கி யெடுத்துப்பாரே. ௧உ௦

எடுத்துமிகப்பார்க்கையிலே யென்னசொல்வேன் இன்பமுள்ளசி றுபொடியாங் தகடுபோலத், தொடுத்துநின்றதாமரைப்பூ வாசம்வீசுந் துரைத்தனத்தார்க்கேற்றபச்சைப் பூரமாச்சு, அடுத்துநின்றபேர்களு க்குமிந்தவாசம் அதிகமுடன்செங்கழுநீர்ப்பூப்போல்வீசும், கடுத்து நின் றநீர்கடுப்புகல்லடைப்பு கனமானபித்தமெல்லாங்காணுதோடும். ௧உ௧

வாலைரசவைப்பு.

காணாகாட்சியெல்லா மிந்தநூலிற் கருதினேனின்னமொரு கரு வைக்கேளு, கோணாதவாலைரசம் வைக்குமார்க்கஞ் சொந்தமுடன்சொ ல்லுகிறேன் சூட்சமாக, வேணமொருசாதிலிங்கந்தன்னைநீயும்விதமாக த்தான்பொடித்துத் தோண்டிக்கேற்றி, நாணாதகன்னரிவேர்தான்கொ ஞ்சம் நன்மையுடன்பொடிசெய்து கூடப்போடே. ௧உஉ

போட்டுமேமறுதோண்டி தன்னைநீயும்புனிதமுடன்றான் மூடிபொ ருந்தவைத்து, நாட்டியேசீலைமண் ணெழுஞ்செய்துநலமாகவுலர்த்தபின் பு நன்மையாக, ஆட்டுமேகணபதிக்குப் பூசைசெய்து வப்பனேகாலு கையி லேற்றிமைந்தா, காட்டுமேகடாக்கினியாகத்தானுங் கனமாகவொ ருசாம மெரித்திடாயே. ௧உ௩

எரித்தந்தவுலையணைத்தே யிறக்கிமைந்தா இன்பமுடன் ஆறவிட் டேயவிழ்த்துநீயுந், தரித்தமொருமேற்றோண்டி தன்னைமைந்தா தன்

மையுள்ள * வராகமுடிதன்னாலேதான், தெரிந்துமிகப்போ மற்றுடை த்துநீயுந் திறமாகப்பார்க்கையிலே ரூகம்போலே, பொருந்திமிகஇருந் ததொருவாலேதன்னைப் புத்தியுடன்குடுக்கைதனிலடுத்துவைவே. கஉச

*வராகமுடியென்பதுபன்றிமயிர்க்கற்றை.

## வாலைரசத்துக்குத் திரும்வியாதி.

வைத்தொருவாலைதன்னைப் பணவிடைக்கால்மைந்தா மார்க்கமுட ன்விடைத்தலேவேர் சந்தனத்தில்,மெய்த்திட்டமாகவேபத்துநாள்தான்மே ன்மையுடனந்திசந்தி யீய்ந்தாயானால், கைத்தவொவுயுகையுடனேபுளியு ந்தள்ளிக் கனமாகஇருபதுநாள் கழிந்தபின்புசெய்த்திட்டந் தவறாமல் வேபங்கேய்த்துச் சிவசிவாதலேதுணிந்தால்புளியைக்கூட்டே. கஉரு

கூட்டவேதீருகிற வியாதிகேளு கூறுகெட்டசொரிசிரங்குகிரந்தி நோயும், நாட்டவேபுண்புரைகள் வயிற்றிரைச் சல்லமானபேதியுடன் காய்ச்சல்தீரும். பூட்டவேதேகமதிற் காந்தமீறிபுளிப்புடன்றுது விர்த் திப் பெலமுண்டாகும், வாட்டமாமின்னமொரு அநுபானங்கேள்மை ந்தனேவாலைரசம் விராகன்ரண்டே. கஉசா

## வாலைரசத்திற்கு அநுபானம் தீருநோய்கள்.

விராகனிடையிரண்டப்பா பாங்கிப்பட்டை வீரானதிப்பிலியிலவ ங்கம்ரண்டு, விராகனிடைநாலப்பாகரும்புவெல்லம்விசையடங்கத்தான ரைத்தே யுண்டைகேளு, விராகனிடைமுக்காலாயுருட்டிமைந்தா வீறு கெட்டமானிடருக்கேழுநாள்தான், விராகனிடைமுக்காலாயந்திசந்தி வரமுடன்றான்கொடுத்து மேலுங்கேளே. கஉஎ

கேளப்பாபத்தியந்தான் உப்ப காதுஇருமையுடன்பசுவின்பால்கூ ட்டிக்கொள்ளு, நாளப்பாபதினைந்தாநாளிலேதான்நன்மையுடன்தலைமுழு க்குநமுழுகவாறு, கேளப்பாகொன்றுமில்லைக் கோழிச்சாறுகூட்டியேப த்தியத்தை முறித்துப்போடு, வேளப்பாவாயெல்லாம் வெந்துகாணும் விதமாகத்தான்றனே யாறுந்தானே. கஉஅ

தந்தானேயமுறையிற்றீருநோய்கள் தன்மையில்லா மேகவெள் ளை தடிப்புப்புண்கள், சேர்ந்ததொருஅழிகிரந்தி குழிக்கிரந்திதீராத அ ரையாப்புமேகசூலை, போந்தானேகல்முடக்குகைம்முடக்கும் பொல்லா தநோய்களெல்லாம்போகுஞ்சொன்னேன், நாந்தானேவாலையிடகருணை யாலே நன்மையில்லாவியாதியெல்லா மலமுதாமே. கஉகூ

தாதுபுஷ்டிக்குக் குளிகை.

நலமான இன்னமொரு குளிகைகேளு நன்மையுள்ளவாலரசஞ்சமூஞ்சிமூன்று. குலமானசாதிலிங்கஞ்சமூஞ்சியொன்றுகூறுகிறேம்வெண்காரங்கிராம்புகஞ்சா, தலமானமுருங்கைவிதைசாதிக்காயுந்தன்மையுள்ளசாதிபத்ரி முந்தக்காசு பிலமான அபினபூனைக்காலிவித்தும் புண்ணியனேசாரத்தின் பருப்புங்கூட்டே, ௧௱

கூட்டுவாய்பூமிசர்க் கரைக்கிழங்குகுணமாகவதைக்கரைப்பலந்தான் கூட்டே, நாட்டுவாய்ப்பொடிசெய்து தேங்காய்க்குள்ளேநன்மையுடன்றானடைத்துச்சாணமேற்றிப், போட்டுவிடுபத்தெருவிற் புடந்தானப்பா புண்ணியனே * சிரட்டையதுவேகும்போல, ஆட்டுவாயதனைபின்சிரட்டைநீக்கி யப்பனேமுருங்கைப்பூச்சாற்றினாலே. ௧௱௧

* சிரட்டை-கொட்டாங்கச்சி.

முருங்கைப்பூச்சாற்றாலே மூன்றுசாமம்முக்கமுடன்றானரைத்துக்கழற்சிக்காய்போல், நெருங்கவேநீயுருட்டியுலர்த்திக்கொண்டுநீமகனேயோருண்டை தினவாய்க்கேளு, நெருங்கவேபொடிசெய்து சர்க்கரையிலுண்ணுநன்மையுள்ளபுளி தள்ளிச்சாதமுண்ணு, குருங்கையென்றபசுவின்பாற்சற்கரையுங்கூட்டிகுணமாகத்தானருந்திக்கூடுவாயே. ௧௱௨

கூடுவாய்பெண்களுடன் போகஞ்செய்யில் குணமாகவிந்துதம்பனமேயாகி, நாடுவாயிரப்புவிடமாட்டாதப்பா நாரியர்கள்சோபமாய்நடுங்குவார்கள், தேடுவாயிடுப்புவிட மாட்டாதாகில்திறமானகுளிகையிடதிறத்தினாலே, ஒடாதேயுனதுவிந்துவிழுந்திடாது உத்தமனேபெண்களெல்லா முறவாவாரே. ௧௱௩

உறவானகுளிகைதனைபுலத்தோர்க்கே யுண்மையுடன்றான்கொடுக்க வுறுதிகண்டு, திருவானபொருளப்பா வேணதீவார் திறமாகவாங்கியதைத் தருமஞ்செய்தால், பரமானபரமரிடபாதங்காட்டும்பரமகுருதான்வருவார் பணிந்தாயானால், திறமானநிராமயத்தின்ஸ்வரூபங்காட்டி நினைவாலேயொளிகாட்டி வெளிசொல்வாரே. ௧௱௪

வெளிசொல்வார்பொருளாசையின்மையாலேவேதாந்தகுருசொல்லி வெளிபாய்க்காணும், வளிவளிபாவளிதோன்றுமிராஜவீதி மற்றமற்றயோகமெல்லாங் குருட்டுவீதி, ஒளிசொல்வேனென்றுசொல்லி யுலகக்குருவெல்லாம் உன்னிடத்திற்பொருள்பறித்தேயுடலெழுத்தைச்சொல்லி, விழிபதனைமூடிப்பா ரன்றேபோவோர்விழிமூடிலொளியங்கேவிளம்புவாயே. ௧௱௫

